REGD. No. TN-MS (C) 244 * ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 40 காசு

**செல்வம்**

தொழிலாளர் மனமும் உடலும் மகிழ்ச்சியாக இருந்தால்தான் உற்பத்தியின் அளவு அதிகரிக்கும்; செல்வம் வளரும்.

—பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்.

**தொழிலாளி**

ஒரு தொழிற்சாலைக்கு அங்கு வேலை செய்பவர்கள் பங்காளிகளாக இருக்கலாமே தவிர கூலிக் காரர்களாக இருக்கக் கூடாது.

—தந்தை பெரியார்

மலர்: 6 சென்னை 29—1—1982 வெள்ளி வெளியூர் 30—1—1982 சனி இதழ்: 100

## பிப்ரவரி 15-ந் தேதிவரை மேட்டூர் அணை தண்ணீர் விட முடிவு

தஞ்சை, ஜன. 29— தஞ்சை மாவட்டத்தில் 24 ஆயிரம் ஹெக்டர் பரப்பளவில் பயிர் செய்யப்பட்டுள்ள தாளடி பயிருக்காக நேற்றைய தினம் மூடப்படுவதாக இருந்த மேட்டூர் அணையை பிப்ரவரி 15-ந்தேதி வரை திறந்து வைக்க அரசு முடிவு செய்துள்ளது.

விவசாயிகளின் கோரிக்கையை ஏற்று அரசு இவ்வாறு முடிவு செய்துள்ளது.

சென்னை வந்த ஸ்பெயின்நாட்டு மன்னர் மற்றும் ராணியை விமான நிலையத்தில் கவர்னர் சாதிக்அலி, முதல்வர் புரட்சித்தலைவர் மற்றும் அமைச்சர்கள் வரவேற்றனர்.

சென்னையில் முதல்வர் புரட்சித்தலைவரை, இந்தியாவில் உள்ள பிரான்ஸ்நாட்டு தூதர், ஆண்டரலூயிஸ் மஹன்றிராப் சந்தித்துப் பேசினர்.

## வாக்காளர் பட்டியல் வெளியிட தடை

கல்கத்தா, ஜன. 29— மேற்கு வங்கத்தில் இறுதி வாக்காளர் பட்டியல் வெளியிடுவதை காலவரம்பின்றி ஒத்திவைக்க தேர்தல் கமிஷன் உத்தரவிட்டுள்ளது.

வாக்காளர் பட்டியலில் ஒழுங்கீனங்கள் நடைபெற்றுள்ளதாக கூறப்பட்ட புகாரையொட்டி இந்த உத்தரவை பிறப்பித்துள்ளனர்.

### திருட்டு வாகனங்கள் மீட்பு:

# விசேஷ போலீஸ் படை பிடித்த மோட்டார் சைக்கிள் திருடன்

**சென்னை, ஜன 29— சென்னை நகரில் சினிமா தியேட்டர்கள் மற்றும் பாங்க் போன்ற நிறுவனங்கள் முன்பு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த மோட்டார் சைக்கிள்களை திருடி விற்றதாக குமார் என்ற நபர் கைது செய்யப்பட்டுள்ளார்.**

சென்னை நகரில் அண்ணா நகர், அண்ணா சாலை ஆகிய இடங்களில் சினிமா தியேட்டர் மற்றும் பாங்க் போன்ற நிறுவனங்கள் முன்பு நிறுத்தி வைக்கப்படும் மோட்டார் சைக்கிள்கள் காணாமல் போய் விடுவதாக போலீசாருக்கு பல புகார்கள் வந்தன.

இதுபற்றி விசாரிக்க துப்பறியும் துறையைச் சார்ந்த டிடெக்டிவ் இன்ஸ்பெக்டர் கோபால கிருஷ்ணன் தலைமையில் விசேஷ போலீஸ் படை அமைக்கப்பட்டது,

இந்தப் படையினர் தீவிர விசாரணை நடத்தி குமார் என்ற ராஜனை கைது செய்தனர்.

### மீட்பு

இந்த ஆசாமி கொடுத்த தகவலின் பேரில் சென்னையில் திருடப்பட்ட 12 மோட்டார் சைக்கிள்கள் மீட்கப்பட்டன.

சென்னையில் திருடப்பட்டு பெங்களூரில் விற்கப்பட்டிருந்த ஒரு மோட்டார் சைக்கிளும் மீட்கப்பட்டது

இந்த ஆசாமி மோட்டார் சைக்கிள்களை திருடி அதனை பிரித்து பாகம்பாகமாக விற்பது வழக்கமாம்.

வடாற்காடு மாவட்டம் மற்றும் சேலம் மாவட்டத்தில் பல இடங்களில் இவ்வாறு இந்த ஆசாமி மோட்டார் சைக்கிள்களையும், பாகங்களையும் விற்றுள்ளதாக தெரியவந்துள்ளது. இது குறித்து போலீசார் தொடர்ந்து விசாரணை நடத்தி வருகிறார்கள்.

இதுவரை போலீசார் 80 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள மோட்டார் சைக்கிள்களை மீட்டுள்ளனர். தொடர்ந்து விசாரணை நடந்துவருகிறது.

## குடித்திருந்த போலீசாரை நீக்கியது சரிதான்

செஞ்சியில் உள்ள சப்-ஜெயிலில் பெரியசாமி, பொன்னுசாமி ஆகிய இரு போலீசார் பணியில் அமர்த்தப் பட்டிருந்தனர்.

வேலைநேரத்திற்கு பிறகு அவர்கள் இருவரும் மது அருந்திவிட்டுபோதையில் ஒரு லாரி டிரைவரிடம் சண்டை பிடித்துக் கொண்டிருந்தார்கள்,

இது சம்பந்தமாக லாரி டிரைவர் புகார்செய்தார். திண்டிவனம் போலீஸ் உதவி சூப்பிரண்டு விசாரணை நடத்தி அவர்களைக் குற்றவாளிகள் என்று அறிவித்தார். இதைத் தொடர்ந்து, 2 போலீஸ்காரர்களையும் கடலூர் போலீஸ் சூப்பிரண்டு வேலையிலிருந்து நீக்கி உத்தரவு பிறப்பித்தார்.

இதை எதிர்த்து டி. ஐ. ஜி. யிடமும் போலீஸ் ஐ. ஜி. யிடமும், அந்த 2 போலீசாரும் மேல் முறையீடு செய்தார்கள் என்றாலும் அதை ஏற்காமல வேலை நீக்கம் செய்தது சரியே என்று அவர்களும் அறிவித்தனர்.

பின்னர் உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்தனர். நீதிபதி எஸ்.மோகன் விசாரித்து அவர்களை வேலை நீக்கம் செய்தது சரியே என்று தீர்ப்பளித்தார்.

## கழகத்தோழர் வீட்டில் தி. மு. க. வினர் தாக்குதல்-கொள்ளை

சென்னை, ஜன. 29— பல்லவன் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிலாளர் சங்கத்தின் துணைப் பொதுச்செயலாளர் எம். ஐயம்பு, சுயம்பு வட்டில் இல்லாத போது தி. மு. க. மற்றும் ஐ. என். டி. யு. சி. சங்கத்தைச் சேர்ந்த திருவொற்றியூர் பகுதி ரவுடிகள் புகுந்து சேதம் விளைவித்து ரேடியோ, சில்வர் பாத்திரங்கள் போன்ற ரூ. 5 ஆயிரம் மதிப்புள்ளவைகளை எடுத்துச் சென்று விட்டனர்,

இதே கும்பலைச் சேர்ந்தவர்கள். 56 சி ரூட் கண்டக்டர் கருணாகரனிடமிருந்து வண்டியில் ஏறி பணப் பையை பிடுங்கிச் சென்றனர்.

தாக்குதலில் காயமடைந்த கருணாகரன் ஸ்டான்லி மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுவருகிறார்.

( 8-ம் பத்தி தொடர்ச்சி)

தின் நோக்கம், பேச்சாளர்கள், எழுத்தாளர்களை உருவாக்க பயிற்சி முகாமும் நடத்தப்படும்.

## அண்ணா பிறந்த நாளில்...

தமிழ்நாடு முழுவதும் செயல்வீரர்கள் கூட்டம் நடத்தி முடிக்கப்பட்ட பிறகு முதல்வர் புரட்சித் தலைவர் அனுமதியுடனும், ஆசியுடனும் பேரறிஞர் அண்ணா பிறந்த நாளான செப்டம்பர் 15ம் தேதி இளைஞர் படை துவக்க விழா நடைபெறும்.

எல்லா மாவட்ட மையங்களிலும், கிராமங்கள் தோறும் செயல்படுவதற்கு அந்தந்த பகுதிகளில் அலுவலகம் ஏற்படுத்த இப்போதே ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

இவ்வாறு முசிறிப்புத்தன் எம். எல். ஏ. கூறினர்.

### தமிழக ஆக்கப்பணிகளுக்காக

# கழகம் திரட்டும் இளைஞர் படை

## முசிறிப்புத்தன் தகவல்

**மதுரை, ஜன. 29—தமிழ் நாட்டின் ஆக்கப் பணிகளுக்காக கழக. எம். ஜி. ஆர். மன்றத்தைச் சேர்ந்த, எத்தகைய கடின உழைப்புக்கும் தயாரான 5 லட்சம் இளைஞர்களைத் திரட்டும் பணி நடைபெறும் என்று அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிபுத்தன் எம். எல். ஏ. அறிவித்தார்.**

மதுரையில் முசிறிப்புத்தன் எம்.எல்.ஏ. நிருபர்களுக்கு அளித்தபேட்டியின் போது கூறியதாவது:

தமிழ்நாடு முழுவதும் சுற்றுப்பயணம் செய்து அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக, அனைத்துலக எம். ஜி. ஆர். மன்ற தோழர்களை நேரில் சந்தித்து ஆலோசனை நடத்தி வருகிறேன். கடந்த ஆகஸ்டு மாதம் முதல் இந்தச் சுற்றுப் பயணம் மேற்கொள்ளப் பட்டது. இதுவரை கோவை, சேலம், சென்னை, செங்கற்பட்டு ஆகிய மாவட்டங்களில் செயல் வீரர்கள் கூட்டம் நடத்தி முடிக்கப்பட்டன. தற்பொழுது மதுரை மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து செயல் வீரர்கள் கூட்டத்திலும், பொதுக்கூட்ட நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டு வருகிறேன்.

சட்டமன்ற பட்ஜெட் கூட்டத் தொடருக்குப் பிறகு வடாற்காடு, தென்னாற்காடு மாவட்டங்களில் சுற்றுப்பயணம் மேற்கொண்டு செயல்வீரர்கள் கூட்டத்தில் கலந்துகொள்வேன். சுற்றுப்பயண நிகழ்ச்சி மேலும் 4 மாதங்கள் தொடர்ந்து நடைபெறும்.

### 5 லட்சம் இளைஞர் படை

தமிழ்நாட்டில் முதல்வர் புரட்சித்தலைவர் தலைமையிலான கழக அரசு செயல்படுத்தி வரும் திட்டங்களின் பலன் மக்களுக்குப் போய் சேருகிறதா என்பதை கண்காணிக்கவும், திட்டங்கள் பற்றி மக்களுக்கு எடுத்துக் கூறவும், மக்களுக்கான ஆக்கப் பணிகளில் பங்கெடுத்துக்கொள்ளவும் மாவட்டந்தோறும் கிராமம், கிராமமாக இளைஞர் படை அமைக்கப்பட்டு வருகிறது.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம், அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றம் ஆகியவற்றைச் சேர்ந்த இளைஞர்கள் இந்தஇளைஞர் படையில் இடம்பெறுவார்கள். தமிழக மக்களின் ஆக்கப் பணிகளை செயல்படுத்த எந்தகடினஉழைப்புக்கும் தயாராக இருக்கிற 5 லட்சம் இளைஞர்கள் திரட்டப்படுவார்கள்.

ஒவ்வொரு மாவட்டத் தலைநகரிலும் இளைஞர் படைக்கு தலைமை மன்ற அமைப்பு ஏற்படுத்தப் படும். இளைஞர் படையில் அங்கம் வகிப்பவர்களுக்கு பொது அறிவு, அரசியல், வரலாறு ஆகியவைபோதிக்கப்படும். அத்துடன் அவர்கள் உடல்நலத்தைப் பேணவும் உடற்பயிற்சி அளிக்கப்படும்.

பண்டைய தமிழர்களின் வீர விளையாட்டுக்களிலும் இளைஞர்கள் பயிற்சி பெறுவார்கள் கல்வி அறிவு, உடற் பயிற்சி, கட்டுப்பாடு உடையவர்களாக இளைஞர்களை உருவாக்கி, எதிர் காலத்தில் அரசியல் பொறுப்பேற்க செய்வதே செயல் திட்டத்

(4ம் பத்தி பார்க்க)

## பேரறிஞர் அண்ணா அவர்கள் நினைவுநாள் மவுன ஊர்வலம்: புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற தோழர்களுக்கு

வருகிற 3—2—82-ம் நாள் புதன் கிழமை காலை 8 மணிக்கு

மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள்

தலைமையில் நடைபெற உள்ள பேரறிஞர் அண்ணா அவர்களின் நினைவுநாள் மவுன ஊர்வலத்தில் சென்னை மாநகர், புறநகர் பகுதிகளில் உள்ள புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்ற. சார்பு மன்றத் தோழர்களும், மற்றும் கழகத்தோழர்களும் திரளாகக்கலந்துகொண்டு பேரறிஞர் அண்ணா அவர்களின் துயிலகத்துக்குச் சென்று மரியாதை செலுத்தி உறுதி மொழி எடுப்போம்,

திருச்சி

ஆர். சவுந்தரராசன் — பொதுச் செயலாளர்

பி முசிறிப்புத்தன் — தலைவர்

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றப்

# பஸ்சில் ரூ. 2.30 பிக்பாக்கெட்: ஆசாமிக்கு 1 வருடம் ஜெயில்

சென்னை, ஜன. 29— த்தப் பிக்பாக்கட் 2 பாய் 30 காசு. அந்தப் ர்வழிக்கு கிடைத்த யில் தண்டனை ஒரு நட கடுங்காவல்! சென்னை ஆயிரம் விளக்கைச் சேர்ந்த அந்த பலே ஆசாமி பெயர் நித்யா என்கிற நித்யானந்தம் வயது 50.

'29-ஏ' என்ற பஸ்சில் பயணம் செய்த அருள் ஜோதிநகரைச் சேர்ந்த முனிவரதனிடமிருந்து நித்யா 2 ரூபாய் 30 காசு ஜேப்படி செய்தார்.

அவரைக் கையும் களவுமாகப் பிடித்து முனிவரதன் போலீசில் ஒப்படைத்தார் அவர் மீது வழக்குத் தொடரப்பட்டது. வழக்கை 14-வது மெட்ரோபாலிடன் மாஜிஸ்திரேட் விசாரித்து நித்யானந்தத்துக்குஒருவருட கடுங்காவல் சிறைத்தண்டனை விதித்து தீர்ப்புக்கூறினர்.

## பேரறிஞர் அண்ணா அவர்கள் நினைவுநாள் மவுன ஊர்வலம்: அண்ணா தொழிற்சங்கப் பேரவை தோழர்கள் கவனத்துக்கு

வருகிற 3—2—82-ம் நாள் புதன் கிழமை காலை 8 மணிக்கு,

மாண்புமிகு முதல்வர் புரட்சித்தலைவர் அவர்கள்

—தலைமையில் நடைபெற உள்ள பேரறிஞர் அண்ணா அவர்களின் நினைவுநாள் மவுன ஊர்வலத்தில் சென்னை மாநகர், புறநகர் பகுதிகளில் உள்ள கழக தொழிற்சங்கத் தோழர்கள் திரளாகக் கலந்து கொண்டு பேரறிஞர் அண்ணா அவர்களின் துயிலகத்துக்கு சென்று மரியாதை செலுத்தி உறுதி மொழி எடுப்போம்,

வை பெருமாள்
பொதுச்செயலாளர்,
அண்ணா தொழிற்சங்கப் பேரவை.

# ஆதி திராவிடர் நல வார விழா

24-1-82 முதல் 30-1-82 வரை

## ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலனுக்காக தமிழக அரசு செய்யும் பணிகள்

(1) சென்னையிலுள்ள அரசு கல்லூரி மாணவ, மாணவியர்களுக்கான விடுதிகளில் 1-12-77 முதல் ரூ. 65-ல் இருந்து ரூ. 80க்கு உயர்த்தப்பட்ட உணவுக்காக செலவிடப்படும் தொகை 1981—82-ம் ஆண்டிலிருந்து நபர் ஒன்றுக்கு மாதம் ரூ. 95வீதம் மேலும் உயர்த்தப்பட்டுள்ளது. இதே போன்று மற்ற இடங்களில் உள்ள விடுதிகளில் 1-12-77 முதல் ரூ. 55-ல் இருந்து ரூ. 65க்கு உயர்த்தப்பட்ட உணவுக்காக செலவிடப்படும் தொகை 1981—82-ம் ஆண்டிலிருந்து நபர் ஒன்றுக்கு மாதம் ரூ. 80 ஆக மேலும் உயர்த்தப்பட்டுள்ளது.

சென்னையிலுள்ள அரசு தொழிற்பயிற்சி மாணவ, மாணவியர்களுக்கான விடுதிகளில் ரூ. 65-ல் இருந்து ரூ. 80/-க்கு 1979—80ல் உயர்த்தப்பட்ட உணவுக்காக செலவிடப்படும் தொகை 1981—82-ம் ஆண்டிலிருந்து நபர் ஒன்றுக்கு மாதம் ரூ. 95/- வீதம் மேலும் உயர்த்தப்பட்டுள்ளது. இது போன்று மற்ற இடங்களில் உள்ள விடுதிகளில் ரூ. 55/-ல் இருந்து ரூ. 65/- ஆக 1979—80ல் உயர்த்தப்பட்ட உணவுக்காகச் செலவிடப்படும்தொகை 1981—82-ம் ஆண்டிலிருந்து நபர் ஒன்றுக்கு மாதம் ரூ. 80/- ஆக மேலும் உயர்த்தப்பட்டுள்ளது.

(2) உயர்நிலைப் பள்ளி மாணவ/மாணவியருக்கான விடுதிகளில் 1978—79-ம் ஆண்டு ரூ. 40/-ல் இருந்து ரூ. 45/- ஆக உயர்த்தப்பட்ட உணவுக்காகச் செலவிடப்படும்தொகை 1981—82-ம் ஆண்டிலிருந்து நபர் ஒன்றுக்குமாதம்ரூ.60/- ஆக மேலும் உயர்த்தப்பட்டுள்ளது.

(3) புதியதாக 90 அரசு விடுதிகள் திறக்கப்பட்டுள்ளன.

(4) ரூ. 20இலட்சம் செலவில் ஆதிதிராவிடர்மற்றும் பழங்குடியினருக்கான பள்ளிகளுக்கு 5 நல்ல கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன. ரூ. 112இலட்சம் மதிப்பீட்டுசெலவில்கட்டப்பட்டு வரும் 32 பள்ளிக் கட்டிடங்கள் பல நிலைகளில் கட்டுமானப்பணியில் முன்னேற்றம் அடைந்துள்ளது.

(5) ஆதிதிராவிடர் வீட்டு வசதி மேம்பாட்டுக்கழகத்தின் மூலம் ரூ. 291.32 இலட்சம் செலவில் அரசு விடுதிகளுக்கு51நல்ல கட்டிடங்கள் கட்டப்பட்டுள்ளன. மேலும் ரூ. 408.90 இலட்சம் மதிப்பீட்டில் கட்டப்பட்டு வரும் 139 கட்டிடங்களுக்கானகட்டுமானப் பணிகள் பல நிலைகளில் முன்னேற்றம் அடைந்துள்ளது.

(6) பள்ளி இறுதித் தேர்விலும், மேல்நிலைப் பள்ளி இறுதித்தேர்விலும் 60 விழுக்காடும் அதற்கு மேலும் மதிப்பெண்கள் பெறும் ஆதிதிராவிட மற்றும் பழங்குடிமக்கள் மாணவ, மாணவியருக்கு ரூ. 300 தனித்தகுதிமான்ய மாக வழங்கப்படுகிறது.

(7) ஆதிதிராவிட மற்றும் பழங்குடியினர் நலத் தொடக்கப் பள்ளிகளில் ஒன்று முதல் ஐந்து வகுப்புகளில் பயிலும் ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் மாணவர்களுக்குஇப்பொழுது வழங்கப்படும் ஒரு ஜோடி சீருடையுடன் 1980—81-ல் இருந்து கூடுதலாக 1 ஜோடி சீருடை வழங்க ஆணையிடப்பட்டுள்ளது. மேலும் இத்துறையில் நடத்தப்படும் நடுநிலைப்பள்ளிகளில் 6 முதல் 8 வகுப்புகளில் பயிலும் ஆதிதிராவிடர்மற்றும் பழங்குடியினர் மாணவர்களுக்கு இதுவரைசீருடை வழங்கப்படாமல் இருந்த நிலையில் அவர்களுக்கு 1980—81-லிருந்துஇரண்டு ஜோடி சீருடைகள் வழங்க ஆணையிடப்பட்டு தற்போது செயல்படுத்தப்பட்டு வருகிறது. ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலப்பள்ளிகளில் 10-ம் வகுப்பு வரை பயிலும் எல்லா மாணவியருக்கும், விடுதிகளில் தங்கிப் பயிலும் எல்லா மாணவியருக்கும், அவர்கள் சாதியைப் பாராமல், இரண்டுஜோடி சீருடைகள் வழங்கப்படுகிறது. மேலும் 1 முதல் 8-ம் வகுப்பு வரை பயிலும் அனைத்து மாணவருக்கும் அரசு விடுதிகளில் தங்கிப் பயிலும் மாணவர்களுக்கும் இரண்டுஜோடி சீருடைகள் வழங்கப்படுகின்றன. இந்த இரண்டு ஜோடி சீருடைகளும் வருட ஆரம்பத்திலேயே வழங்க ஆணையிடப்பட்டுள்ளது.

(8) 3ஆரம்பப் பள்ளிகள் நடுநிலைப்பள்ளிகளாகவும் 4 நடுநிலைப் பள்ளிகள் உயர்நிலைப்பள்ளிகளாகவும் 7 உயர்நிலைப்பள்ளிகள் மேல்நிலைப் பள்ளிகளாகவும் உயர்த்தப்பட்டுள்ளன.

(9) 296 இளநிலை ஆசிரியர் பதவிகளைஇடைநிலை ஆசிரியர் பதவிகளாக உயர்த்தியும் (1977—78-ம் ஆண்டில் 113-ம், 1978—79ம் ஆண்டில் 183-ம் ஆக 296) 33 தமிழ் பண்டிதர்கள் பதவிகள் 33 நடுநிலைப் பள்ளிகளில் ஏற்படுத்தியும் 1979—80-ம் ஆண்டில் ஏற்படுத்தியும் ஆணையிடப்பட்டுள்ளது. 1981-82-ல் மேலும் 172 இளநிலை ஆசிரியர்பதவிகளை இடைநிலை ஆசிரியர்கள் பதவிகளாக உயர்த்த ஆணையிடப்பட்டுள்ளது.

(10) அரசு உதவித் தொகை பெற்று சென்னை நகரம் மற்றும் மாவட்ட, வட்ட தலைநகரங்களில் நடத்தப்படும் தனியார் மாணவர் இல்லங்களில் தங்கிப் பயிலும் மாணவர் ஒவ்வொருவருக்கும் 1—12—78 முதல் மாதம் ஒன்றுக்கு ரூ. 25-ல் இருந்து ரூ. 35 ஆக உயர்த்தப்பட்டிருந்த உதவித் தொகையினை மாதம் ஒன்றுக்கு ரூ. 45 ஆக 1981—82-ம் ஆண்டில் மேலும் உயர்த்தப்பட்டுள்ளது. மற்ற இடங்களில் உள்ளவைகளுக்கு 1-12-78 முதல் ரூ. 25-ல் இருந்து ரூ. 30ஆக உயர்த்தப்பட்டிருந்ததை மாதம் ஒன்றுக்கு ஒரு நபருக்கு ரூ. 40 ஆக 1981—82-ல் மேலும் உயர்த்தப்பட்டுள்ளது.

(11) மெட்ரிக் படிப்புக்கு முந்தைய படிப்பு பயிலும் அனைத்து ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் மாணவர்களுக்கும் அவர்கள் தம் பெற்றோர் ஆண்டு வருமானத்தை பாராமல் 4-ம் வகுப்பு முதல் 10-ம் வகுப்பு வரை இலவசமாக புத்தகங்கள் வழங்குவதுடன், சிறப்புக் கட்டணத்தை பள்ளிகளுக்கும் தேர்வு கட்டணத்தை அரசு தேர்வு இயக்குனருக்கும் நேரடியாக செலுத்தப்படுகிறது. 1 முதல் 3-ம் வகுப்பு மாணவர்களுக்கு கல்வித் துறையில் புத்தகங்கள் இலவசமாக வழங்கப்படுகிறது. ஆண்டொன்றுக்கு 7.79 லட்சம் மாணவர்கள் இத்திட்டத்தினால் பயன் அடைந்தனர். 1977—78-ல் இருந்து இதற்கான ஆண்டு வருமான வரம்பு ரூ. 3000/- என இருந்தது நீக்கப்பட்டுள்ளது. 1977—78-க்கு முன் மெட்ரிக் படிப்புக்கு முந்தைய படிப்பு பயிலும் மாணவர்களுக்கு அவர்கள் வீட்டிலிருந்து படித்தால் அப்பொழுதுள்ள ரூ.3000/- என்ற ஆண்டு வருமான வரம்புக்குட்பட்டு கல்வித் தொகையை பணமாக அளிக்கப்பட்டது. 6-ம் வகுப்பிலிருந்து 10-ம் வகுப்பு வரை பள்ளியைச் சேர்ந்த விடுதிகளில் தங்கிப் பயிலும் மாணவ, மாணவியருக்கு உண்டி மற்றும் உறையுள் தொகை .150/- முதல் ரூ. 250/- வரை அளிக்கப்படுகிறது. 1981—82-ம் ஆண்டிலிருந்து மேற்படி மாணவர்களுக்கான ஆண்டு வருமான வரம்பு ரூ. 3000-ல் இருந்து ரூ: 6000 ஆக உயர்த்தப்பட்டதுடன் உண்டி, உறையுள் தொகையும் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 250 முதல் ரூ.350 வரை ஆக உயர்த்தப்பட்டது.

"(12) 1976—77-ல் கடன் உபகாரச் சம்பளமாக வழங்கப்பட்ட தொகை ரூ. 11—21 இலட்சம் மட்டுமே. 1980—81-ல் இத்தொகை ரூ. 58.91 இலட்சமாக உயர்ந்துள்ளது. 1977—78 முதல் 1980—81 வரை 18188 மாணவ மாணவியர்களுக்கு கடன் உபகாரச் சம்பளமாக ரூ. 146 இலட்சம் வழங்கப்பட்டது.

(13) சட்ட பட்டதாரிகள் தங்கள் தொழிலை தொடங்குவதற்கு உதவியாகவும், புத்தகங்கள், மேஜை, நாற்காலிகள் முதலியவை வாங்குவதற்கும் மான்யமாக ரூ. 500-ம் பதிவுக் கட்டணம் மற்றும் அறைவாடகைபோன்றவைகளுக்கு ரூ. 750 கடனாகவும் வழங்கப்பட்டு வந்தது. 1980—81 முதல் மேற்படி மான்யத் தொகை ரூ. 500-ல் இருந்து ரூ. 750 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

(14) தொழிற் பயிற்சி நிலையங்களில் பயிலும் ஆதிதிராவிட மாணவர்களுக்கு நபர் ஒன்றுக்கு. மாதம் ரூ. 45 வீதம் வழங்கப்பட்ட உதவித் தொகை 1—8—80 முதல் ரூ. 55 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

(15) இத்துறையால் நடத்தப்படும் முன்னோடிப் பயிற்சிநிலையத்தில்பயின்று அனைத்திந்திய பணிக்கான தேர்வில் வெற்றி பெறும் நபர்களுக்கு அவர்களை பாராட்டும் நோக்குடன் முசௌரி (அ) மற்ற இடங்களில் மேற்படி நபர்கள் பயிற்சிக்கான செலவுக்காக ரூ. 1,000 உதவித் தொகையாக வழங்கப்படுகிறது.

தமிழ்நாட்டைச் சார்ந்த முன்னோடிப் பயிற்சிநிலையத்தில் பயிற்சியின்றியே அனைத்திந்திய பணிக்கான தேர்வில் வெற்றி பெறும் ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினருக்கும் இஃது அளிக்கப்படும். இத்தொகையை பெறுபவர்களுக்கு ஆண்டு வருமான வரம்பு ஏதும் இல்லை.

(16) வருமான வரம்பின்றி கல்லூரி படிப்புக் கட்டணசலுகை1977—78ம் ஆண்டு முதல் வழங்கப்படுகிறது. மேலும் மெட்ரிக் படிப்புக்கு மேல் கல்வி பயிலும் இந்து ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடி மாணவர்களுக்கு மத்திய அரசு உபகாரச்சம்பளமும் மத்திய உபகார சம்பளத்துக்கு தகுதியற்ற இந்து ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடி மாணவர்களுக்கும் ஆதிதிராவிடர் கிருத்துவ மாணவர்களுக்கும் மாநில அரசு உபகாரச் சம்பளமும் வழங்கப்படுகிறது. மத்திய அரசு உபகாரச் சம்பளம் பெற இருந்த பெற்றோர் (அ) பாதுகாவலர் ஆண்டு வருமான வரம்பு 1—7—81 முதல் ரூ. 9,000-ல் இருந்து ரூ. 12.000 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. மாநில அரசு உபகாரச் சம்பளத்திற்கானபெற்றோர்பாதுகாவலரின் ஆண்டு வருமானம் 1981—82 கல்வியாண்டிலிருந்து ரூ. 3000-ல் இருந்து ரூ. 6,000 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. தவிர மத்திய அரசு உபகாரச்சம்பள திட்டத்தின் கீழ் வழங்கப்படும் பராமரிப்புத்தொகை 1-7-81 முதல் மாதம் ஒன்றுக்கு மாணவர் ஒன்றுக்கு ரூ. 5 முதல் 60 வரை உயர்த்தப்பட்டுள்ளது.

(17) அறிவுகூர்மையுள்ள மாணவர்களுக்கு வழங்கப்படும் சிறப்பு கல்வி உதவித் தொகை அளிக்கும்திட்டம் ஆதி திராவிடர்களுக்கும் கிருத்துவ மதம் மாறிய ஆதிதிராவிடர் மாணவர்களுக்கும் மட்டும் இருந்தது. இது பழங்குடியினர் இனத்தைசார்ந்த மாணவ, மாணவிகளுக்கும் ஆதிதிராவிடர் மற்றும் கிருத்துவ மதம் மாறிய ஆதிதிராவிடர் மாணவிகளுக்கும் நீட்டிக்கப்பட்டது. இத்திட்டத்தின்படி ஒவ்வொரு மாவட்டத்திலிருந்து அதிக மதிப்பெண்களும் அதற்கு அடுத்த மதிப்பெண்களும் பெற்ற இந்து ஆதி திராவிடர் மாணவர் இருவர் மாணவியர் இருவர், மதம் மாறிய ஆதிதிராவிட கிருத்துவமாணவர்இருவர், மாணவியர் இருவர்மற்றும் பழங்குடியினர் இனத்தைச் சார்ந்த மாணவர் இருவர், மாணவியர் இருவர் ஆகியோருக்கு இந்த உதவித் தொகை அளிக்கப்படும். இந்த உதவித் தொகை பெறுவதற்கு வருமான வரம்பு இல்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஆதி திராவிடர் இந்து மாணவர் ஒருவர் மற்றும் மாணவியர் ஒருவர் ஆக இருவருக்கு காந்தி நினைவு சிறப்பு உதவித் தொகையும், இதேபோன்று ஆதிதிராவிட கிருத்துவ மாணவ, மாணவியர் இருவருக்கும் பழங்குடி மாணவ, மாணவியர் இருவருக்கும் தகுதி வழி உதவித் தொகையும் தொடர்ந்து வழங்கப்பட்டு வருகிறது. இவ்வுதவித் தொகை பெறுவதற்கு வருமான வரம்பு இல்லை

(18) 1977—78-ம் ஆண்டிலிருந்து கறவை மாடுகள் வாங்குவதற்கு ஆதி திராவிடர் பால் வழங்கு கூட்டுறவுசங்கத்தைசார்ந்த உறுப்பினர்களுக்கு அளிக்கப்பட்ட உதவித் தொகை ரூ. 500-லிருந்து ரூ. 1,500 ஆக மாற்றப்பட்டுள்ளது. இஃது ரூ. 500 மான்யமாகவும் ரூ. 1000 ஏதாவது ஒரு தேசியமயமாக்கப்பட்ட வங்கியிலிருந்து கடனாகவும் வழங்கப்படும்.

(19) வட்டி இல்லாக் கடன் வழங்கு திட்டத்தின் கீழ் மோட்டார் பொருந்திய சைக்கிள் ரிக்ஷா வாங்கவும், பெட்ரோல் வியாபாரம் செய்யவும் கடனுதவி வழங்கப்பட்டது. தீப்பெட்டி கூட்டுறவு சங்கம் ஆரம்பிக்கவும் கடனுதவி வழங்கப்பட்டது. பழங்குடியினரும் இத்திட்

(3-ம் பக்கம் பார்க்க)

ஆதி திராவிட மக்களுடன் முதல்வர் எம். ஜி. ஆர். சம்பந்தி

கலப்பு கல்யாணத்தை நடத்தி வைக்கிறார் முதலவா எம.ஜி. ஆர்

ஆதி திராவிட பெணகளுக்கு தையல் இயந்திரங்கள வழங்கப்படுகின்றன

---

தமிழ் நாட்டில் ஆதிதிராவிடர் வாரம் 1982 சனவரித் திங்கள் 24 முதல் 30 வரை மிகச் சீரிய முறையில் கொண்டாடப்படும் என்பதை அறிய நான் மிக மகிழ்ச்சி அடைகின்றேன். ஆதிதிராவிடர்களை மேம்பாட்டையச் செய்யும் பணியில் அரசு தன்னைத் தானே ஈடுபடுத்திக் கொள்வதன்றி சமூகத்தில் எல்லாப் பகுதியினர் உதவியையும் பெறுவது அரசின் ஆர்வமாக உள்ளதென்பதனை இது எடுத்துக் காட்டுகின்றது.

ஆதிதிராவிடர்கள் மேம்பாடென்பது இந்திய அரசு மற்றும் தமிழக அரசின் கவனத்தில் நீண்ட நெடுநாட்களாக இருந்து வருகின்றது. அவர்களது வாழ்வில் ஒவ்வொரு பகுதியிலும் அவர்கள் நிலையில் மேம்பாட்டையச் செய்ய ஆண்டு தோறும் போதிய தொகைவரவு செலவு திட்டத்தில் நிதி ஒதுக்கீடாகச் செய்யப்பட்டு வருகின்றது. இவ்வித நிதி ஒதுக்கீடுகள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. சமூக, பொருளாதார காரணங்களினாலும், மற்ற பல காரணங்களாலும் அவர்கள் அடைந்துள்ள பரம்பரையான இக்கட்டுகள் களையும் வகையில் தமிழக அரசினால் அவர்கட்கு அளிக்கப்பட்டு வரும் சலுகைகளும் கல்வி நிறுவனங்களிலும் வேலை வாய்ப்புகளிலும் அளிக்கப்பட்டுள்ள இட ஒதுக்கீடுகள் முதலியன இவர்களுக்கு உதவுவதற்காகவே உள்ளன. அவர்களிடம் உள்ள தாழ்வுகள் நீங்கில் அவர்களது கண்ணோட்டத்திலும் மற்றும் சமுதாய நோக்கிலும் மாற்றங்கள் ஏற்பட்டு அவர்கள் இந்நாட்டின் வளர்ச்சிக்கு மற்றவர்களுடன் இணையாக பங்கு கொள்ள முடியும். இல்லையாவும் மக்களாட்சியில் அரசியல், பொருளாதார ஆன்மீக அடித்தளத்தை வெகுவாக வலுப்படுத்தும்.

இவ்விழா நிகழ்ச்சிகள் வெற்றி பெற எனது நல் வாழ்த்துக்கள்.

சாதிக்அலி

தமிழக கவர்னர்

---

ஆண்டுதோறும் ஜனவரி 24 முதல் 30-ந்தேதிவரையிலான ஒரு வார காலத்தை ஆதி திராவிடர் நல வாரமாக நாம் கொண்டாடி வருகிறோம். நமது சமுதாய அமைப்பில் இன்னும் சில பகுதிகளில் நிலவி வருகிற தீண்டாமை கொடுமையினை முழுவதுமாக அகற்றுகிற பெரும்பணிக்கு நம்மை மீண்டும்ஒப்படைத்துக் கொள்ள இந்த வாரம் ஒரு வாய்ப்பாக அமைகிறது.

மனிதர்களில் ஒரு பகுதியினரைத் தீண்டத்தகாதவர்கள் என்றுஒதுக்கி வைப்பது நமது சமுதாயத்தின் மீது ஒரு கரும்புள்ளியாக விழுந்திருப்பதை எடுத்துக் காட்டி, அந்த நிலையை மாற்றியமைக்க வேண்டும் என்பதை அண்ணல் காந்தியடிகள், தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, டாக்டர் அம்பேத்கார் போன்ற மாபெரும் தலைவர்கள் தங்களின் அயராத தொண்டின் மூலம் மக்கள் மனதில் பதிய வைத்திருக்கிறார்கள்

பிறப்பினால் உயர்வு தாழ்வுப் பேதங்களைக் கற்பிக்கும் வழக்கத்தைத் தமிழகம் தொன்று தொட்டே ஏற்றுக்கொண்டது இல்லை. இடைக்காலத்தில் விளைந்த இந்த சமூகத் தீமையைத் தந்தை பெரியார் அவர்களும், பேரறிஞர் அண்ணா அவர்களும் தங்கள் வாழ்நாள் முழுதும் கடுமையாக எதிர்த்துப் போராடினார்கள் பேரறிஞர் அண்ணா அவர்களின் இலட்சியங்களுக்காகப் பாடுபடும் இந்த அரசு தாழ்த்தப் பட்டவர்களை அனைத்துத் துறைகளிலும் முன்னேற்ற பல அரிய திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்தி வருகிறது. கல்வி, வேலை வாய்ப்பு, தொழில் ஆகிய துறைகளில் பல சலுகைகளை ஆதிதிராவிடருக்கு தமிழக அரசு அளித்து வருகிறது.

இந்த சலுகைகளைப் பயன்படுத்திக் கொண்டு மற்றவர்களோடு சரிநிகர் சமானமாக முன்னேற ஆதிதிராவிடர்கள் முன் வர வேண்டும். அது போலவே ஆதி திராவிடர்களைத் தனியாக ஒதுக்கிவைப்பது நமது சமூக ஒற்றுமையின் எதிர்காலத்துக்கே ஆபத்தை ஏற்படுத்தும் என்பதை மற்ற பிரிவினரும் தற்போது உணரத் தலைப்பட்டுள்ளனர். இந்த உணர்வு செயல்வடிவம் பெற வேண்டும்.

ஆதிதிராவிடர் நலத் திட்டங்களை முனைந்து செயல்படுத்துவதிலும், தாழ்த்தப்பட்டோருக்காக ஒதுக்கப்பட்ட நிதியைச் சரிவரப் பயன்படுத்துவதிலும் தமிழ்நாடு நல்லமுறையில் பணி புரிந்துள்ளது என்கிற பாராட்டைப் பெற்றுள்ள நாம், தீண்டாமைக் கொடுமையை அடியோடு அகற்றியதிலும் முதலிடம் வகிக்கிறது தமிழகம், எனும் ஒரு நல்ல பேற்றினைப் பெறுகிற அளவு தீவிர ஈடுபாட்டுடன் சமுதாய சமத்துவத்துக்காக, சமுதாய ஒற்றுமைக்காக முனைப்புடன் பாடுபட உறுதி ஏற்போம். இவ்வகையான எண்ணங்களை மக்களிடம் பரப்பிட ஆதிதிராவிடர் நல வாரவிழா வழிகோலும் என நம்புகின்றேன்.

எம். ஜி. இராமச்சந்திரன்

முதலமைச்சர்

புனித ஜார்ஜ்கோட்டை.
சென்னை-600 009
தேதி 27-1-1982

---

தென்புலத்தின் பண்பாடுகளுக்கும், நாகரீக நயங்களுக்கும் நிலைக்களமாக வாழ்ந்து வரும் ஆதித்திராவிட மக்கள், காலப் போக்கில் பல்வேறு காரணங்களால் பின்தங்கிய மக்களாக ஒதுக்கப்பட்டு, தாழ்த்தப்பட்ட மக்கள் என முத்திரை குத்தப்பட்டது. இந்திய அரசியல் வானில் காந்தி அடிகள் தோற்றத்திற்குப்பின் அம்பேத்கார் அருந்தொண்டிற்குப்பின், இந்து சமுதாயத்தின் ஒரு அங்கமாக விளங்கும் ஆதித்திராவிட மக்களை கைதூக்கி விடுவதில் மத்திய அரசும் மாநில அரசும் பல்வேறு திட்டங்களை வகுத்து செயல்படுத்திவருகின்றன. புரட்சித் தலைவர் அவர்களின் தலைமையில் இயங்கும் நமது அரசு பல்வேறு திட்டங்களின் வாயிலாக ஆதித்திராவிட மக்களுக்கு பொற்காலத்தை உருவாகக கடுமையாக உழைத்து வருகிறது. இந்த முயற்சிக்கு அனைவரும் உறுதுணையாக நின்று திட்டங்கள் வெற்றி பெற ஒத்துழைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

விழா இனிது நடைபெற என்து உளமார்ந்த வாழ்த்துக்கள்.

ம. விஜயசாரதி

மாண்புமிகு ஆதிதிராவிடர் நலத்துறை அமைச்சர்

---

பாரதி நூற்றாண்டு விழாவை நாம் கொண்டாடிக்கொண்டிருக்கும் இந்த நேரத்திலே அவருடைய பாடல்களில் அடிநாத உணர்வாக அமைந்து தீண்டாமை போன்ற சமூகக் கொடுமைகளை எதிர்த்து, துணிந்து போராட அவரை உந்திய, சமத்துவ உணர்வை நாம் மதித்துப் பேணிப் போற்றுவது, பெரிதும் பொருத்தமாக அமையும். மகாத்மா காந்தி நமக்கு அளித்த சீரிய முன்னுதாரணத்தைப் பின்பற்றி ஆதித் திராவிடர்களின் பொருளாதார சமுதாய வாழ்க்கை நிலைகளை உயர்த்தவும், சமுதாயத்தின் மதிப்பு மிக்க உறுப்பினர்களாக விளங்கிப் பணியாற்றும் தகுதியை அவர்களுக்கு அளிக்கவும், பற்பல சமுதாய சீர்திருத்தங்களைச் செயலாற்றுவதில் முன்னணியில் தமிழக அரசு நிற்கின்றது. அரசு மேற்கொள்ளும் இந்த நடவடிக்கைகள் முழுமையான பலனை அளிக்க வேண்டுமென்றால், பல்வேறு நிலையிலுள்ள மக்களின் மனப்பான்மையில் மாறுதல் ஏற்பட்டு ஆதித் திராவிடர்களை அன்புடன் அரவணைக்கும் போக்கு ஓங்க வேண்டும். பாரதக் குடியரசின் முன்னாள் தலைவர் டாக்டர் சாவபள்ளி இராதாகிருஷ்ணன் கூறியதுபோல ஊரிலுள்ள சேரிகளை ஒழித்துவிட்டோம், நம் உள்ளத்திலுள்ள சேரிகளை நாம் ஒழிக்கவேண்டும். எந்த வகையிலும் எந்த முறையிலும் நாம் தீண்டாமையைக் கடைப்பிடிக்க மாட்டோம் என்றும், போலித்தனமான பெருந்தன்மையுடன் பரிவு காட்டுவதுபோல் ஆதித் திராவிடர்களிடம் நடந்து கொள்ள மாட்டோம் என்றும், அவர்களை நம் உடன்பிறப்புகளாக, நமக்குச் சமமானவர்களாக, நம் பங்காளிகளாக உளமார ஏற்றுக்கொள்வோம் என்றும் இந்நன்னாளில் நாம் உறுதி கொள்வோம்.

(ஒம்.) கா. திரவியம்.
இ. ஆ. ப.

தலைமைச் செயலாளர்

---

ஆண்டுதோறும் ஜனவரி திங்கள் 24-ஆம் நாள் முதல் 30-ஆம் நாள் வரை நடைபெறும் ஆதிதிராவிடர் வார விழா ஆதிதிராவிடர்களை மேம்பாட்டையச் செய்யும் பணியில் அரசும் மக்களும் தம்மை மீண்டும் அர்ப்பணித்துக் கொள்ளும் ஒரு அரிய வாய்ப்பினை அளித்து வருகின்றது. அவர்களுக்கு கல்வி, வேலை வாய்ப்பு மற்றும் பொருளாதார முன்னேற்றம் ஆகியவற்றில் முழு வாய்ப்பினையும் வழங்கும் வகையில் பல ஆண்டுகளாக திட்டங்கள் பல உருவாக்கப்பட்டு வருகின்றன. ஆதிதிராவிடர் குடியிருப்புகட்கு குறைந்த அளவு அடிப்படைத் தேவைகள் கிட்டும் வகையில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

ஆதி திராவிடர்கள் பயன் அடையும் வகையில் குறிப்பிட்ட திட்டங்கள் மேற்கொள்ளப்படுவதும், செயல் படுத்தப்படுவதும் ஒவ்வொரு வளர்ச்சித் துறையின் கடமையாகும் என்பதை வலியுறுத்தும் சிறப்புக் கட்டமைப்புத் திட்டத்தின்பால் மக்களின் கவனத்தை ஈர்ப்பதற்கு நடைபெறும் ஆதிதிராவிடர் வார விழாவில் முயற்சிகள் மேற்கொள்ளப்படும் என்பது என் நம்பிக்கை.

ஆதி திராவிடர்கள் குடிமை உரிமைகளைப் பாதுகாப்பதில் அரசுக்குள்ள கவனத்தையும் அக்கறையையும் மக்களுக்கு நாம் எடுத்துக் கூற நடைபெற்று வரும் வார விழா நிகழ்ச்சிகள் நமக்கு ஒரு வாய்ப்பாக அமையும். இந்த வார விழா வெற்றிகரமாக கொண்டாட எனது நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருமதி. அஞ்ஜனிதயாநந்த்,
இ. ஆ. ப.,
ஆணையர் மற்றும் அரசு செயலர்,
சமூக நலத் துறை.

பொ. இல. பொன்னுசாமி
இ. ஆ. ப.

# ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நலனுக்காக...

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆதி திராவிட ஏழைகளுக்கு நிலப்பட்டா வழங்குகிறார் முதல்வர்.

தின்கீழ் பயனை அடையலாம்.

(20) ஆதி திராவிடர்களுக்கு உகந்த பொருளாதார திட்டங்களை செயல்படுத்த ஆதி திராவிடர் வீட்டு வசதி மேம்பாட்டுக் கழகத்தில் ஒரு தனிப் பிரிவு ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தின் கீழ்மாநில-மத்திய அரசுகள் 51:49 என்ற விகிதத்தில் மூலதன பங்குத் தொகை அளிக்கும். 1980—81-ல் மேற்படி விகிதாசாரத்தில் ஆதி திராவிடர் வீட்டு வசதி மேம்பாட்டுக் கழகத்துக்கு ரூ. 2 கோடி மூலதனபங்குத் தொகையாக வழங்கப்பட்டுள்ளது.

(21) இதுவரை ரூ. 9.26 கோடி செலவில் 3.78இலட்சம் வீட்டுமனைகள் வழங்க 28,690.88 ஏக்கர் நிலப் பரப்பு கையகப்படுத்தப்பட்டுள்ளது. 1980—81-ம் ஆண்டு மட்டும் ரூ. 140.58 இலட்சம் செலவில் 1853.47 ஏக்கர் நிலப்பரப்பு 31,302 மனைகள் வழங்க கையகப்படுத்தப்பட்டுள்ளது. இதுவரை இத்திட்டத்திற்கென செலவிடப்பட்ட தொகைகளில் 1980—81-ல் செலவிடப்பட்ட ரூ. 140.58 இலட்சம்தான் மிக அதிகமானதாகும். முந்தைய ஆண்டுகளில் 1969-ல் இருந்து 1976—77 வரை ஆண்டு செலவு ரூ. 50 இலட்சத்தைத் தாண்டியதில்லை.

(22) ஆதி திராவிடர்களுக்கு தமிழ்நாடு ஆதி திராவிடர் வீட்டு வசதி மேம்பாட்டுக் கழகத்தின் மூலம் வீடுகள் கட்டி இலவசமாக அளிக்கப்படுகின்றன. தமிழ்நாடு ஆதி திராவிடர் வீட்டு வசதி மேம்பாட்டுக் கழகத்தின் மூலம் அதிகப்படியான வீடுகளை ஆதி திராவிட மக்களுக்கு கட்டித்தர அரசு கொள்கை அளவில் முடிவெடுத்துள்ளது. அதன்படி ஒவ்வொரு வீடும் 207 சதுர அடி பரப்பளவு கொண்டதாக இருக்கும். ஒவ்வொருவீடும் ரூ. 4400 மதிப்பீட்டில் கட்டிடப் பொருள்கள் விலை ஏற்றத்தால் 15% கூடுதல் செலவுடனும் மலைப் பகுதிகளில் 50% அதிக செலவுடனும் 1979-80 மற்றும் 1980—81-ம் ஆண்டிற்கான வீடு கட்டும் திட்டத்தின் கீழ் ஆண்டு ஒன்றுக்கு 5000 வீடுகள் வீதம் மொத்தம் 10,000 வீடுகள் கட்ட அரசு உத்தரவிட்டுள்ளது. (இதில் 10% நிர்வாகச் சிலவும் அடங்கும்) 1980—81-ம் ஆண்டில் இதற்காக ரூ. 2.20 கோடி ஒதுக்கீடு செய்யப்பட்டது. 1981—82-ம் ஆண்டில் இத்திட்டத்திற்காக ரூ.2. கோடி ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

(23) நகராட்சியில் வேலைசெய்யும் துப்புறவுப் பணியாளர்கள் நகராட்சிக்குச் சொந்தமானவீடுகளில் குடியிருந்தால் அவர்கள் வேலையில் இருக்கும்வரை வாடகை தரவேண்டியதில்லை என அரசு ஆணையிட்டுள்ளது.

(24) தீண்டாமை ஒழிப்புக்காக வேலை செய்த சமூக நல ஊழியர்களின் சேவையை பாராட்டி 176 சமூக நல ஊழியர்களுக்கு சான்றிதழ்கள் வழங்க அரசு ஆணையிட்டுள்ளது.

(25) குடி தண்ணீர் கிணறு தோண்ட 1977—78-ல் ரூ. 5000-ல் இருந்து, ரூ. 6000/- ஆக உயர்த்தி அனுமதிக்கப்பட்ட அளவு உச்சவரம்பு 1980—81-ல் ரூ.6000-ல் இருந்து ரூ. 7,500 ஆக மேலும் உயர்த்தப்பட்டுள்ளது.

(26) ஆதி திராவிடர் மற்றும் பழங்குடியினருக்கு இலவசமாகத் தொழிற் கருவிகள் வழங்கும்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு தொழிலுக்கும் தொழிற் கருவிகளும் சாதனங்களும் வாங்குவதற்கென நிர்ணயிக்கப்பட்ட உச்சவரம்புத் தொகையைப் பாராமல் தொழிற்கருவிகளும், சாதனங்களும் தாழ்த்தப்பட்ட பழங்குடியினர் மற்றும் தாழ்த்தப்பட்ட மதம் மாறிய கிருத்துவர்களுக்கும் நிதி ஒதுக்கீட்டிற்குட்பட்டுவழங்க ஆதிதிராவிட பழங்குடியினர் நல இயக்குநருக்கு அரசு அனுமதி வழங்கியுள்ளது.

(27) கன்னியாகுமரி மாவட்டத்திலும் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள செங்கோட்டை வட்டத்திலும் சலவைத்தொழிலில் ஈடுபட்டுள்ளஆதிதிராவிடர்களுக்கு சலவைத்துறைகள் கட்டப்படுகின்றன.

(28) ஏழை ஆதிதிராவிடர் குடும்பத்தில் யாரேனும் இறந்துவிட்டால் அவர்களது ஈமக்கடனை செய்ய ரூ. 50 நிதி உதவி அளிக்கும் புதிய திட்டம் 1978—79-ம்ஆண்டு கொணரப்பட்டு செயல்படுத்தப்பட்டு வருகிறது.

(29) கொத்தடிமையில் இருந்து விடுவிக்கப்பட்டவர்களுக்கான மறுவாழ்வு திட்டங்கள் செயல்படுத்தப்படுகின்றன. இதுவரையில் தமிழ்நாட்டில் 10 மாவட்டங்களில் 2,929 கொத்தடிமைகள் விடுவிக்கப்பட்டுள்ளனர். இவர்களில் 2,617 நபர்களுக்கு நிலம் வழங்குதல், வேலை வாய்ப்பு அளித்தல், பயன்பாட்டுக்கடன் அளித்தல், வேளாண்மைக்கடன்அளித்தல், கோழிப் பண்ணை வைத்தல், கறவைமாடுகள் வழங்குதல்போன்றதிட்டங்களின் மூலம் மறுவாழ்வு அளிக்கப்பட்டுள்ளது. மற்றவர்களுக்கு தகுந்த மறுவாழ்வுதிட்டங்களைசெயல்படுத்துவது அரசின் பரிசிலனையில் உள்ளது.

(30) குடிமை உரிமைகள் பாதுகாப்பு சட்டத்தினை தீவிரமாக செயல் படுத்த ஏற்கனவே உள்ள 6 சுற்றுக் காவல் படைகள் தவிர மேலும் 7 சுற்றுக் காவல்படைகள் கூடுதலாக ஏற்படுத்தப்பட்டு செயல்படுகின்றன. திருச்சி, மதுரை, திருநெல்வேலி மற்றும் தஞ்சாவூர் (கும்பகோணம்) ஆகிய இடங்களில் 1955-ம் ஆண்டு குடிமை உரிமை பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் வரும் குற்றங்களை விசாரணை செய்ய ஒரு தனி நீதிமன்றம் நிறுவ அனுமதி அளிக்கப்பட்டுள்ளது.

(31) குடிமை உரிமை பாதுகாப்பு சட்டத்தை அமுல்படுத்துவதற்காக மண்டல காவல் துறை அதிகாரி ஒருவரை நியமிக்க அரசுஅனுமதிவழங்கியுள்ளது.

(32) கலப்புமணம் புரிந்து கொண்ட தம்பதியர்களுக்கு, வழங்கப்படும் சலுகையை பன்மடங்கு அதிகரித்து ஆணையிடப்பட்டுள்ளது. ரூ. 4000 அவர்கள்பெயரில் வைப்புத் தொகையாக தேசிய மயமாக்கப்பட்ட வங்கிகளில் போடப்படுவதுடன் ரொக்கமாக ரூ. 300-ம் தங்கப்பதக்கமும்,பாராட்டு பத்திரமும் வழங்கப்படுகிறது.

(33) ஆதிதிராவிட நலத் துறை மூலம் 150 குழந்தைகள் காப்பகங்கள் திறக்கப்பட்டு செவ்வனேசெயல்படுத்தப்பட்டுவருகின்றன. 1980—81-ம் ஆண்டு 50 குழந்தைகள் காப்பகங்கள் திறக்க அரசு ஆணை பிறப்பித்துள்ளது.

(34) ஒருங்கிணைந்த பழங்குடியினர் வளர்ச்சிக்கென சேலம், தென்னாற்காடு, வடஆற்காடு, தர்மபுரி மற்றும் திருச்சிராப்பள்ளி மாவட்டங்களில் 9 பகுதிகளில் துணை திட்டங்கள் செயல்படுத்தப்பட்டு வருகின்றன. 1977—78-ம் ஆண்டு 144 இலட்சம் ரூபாயும் 1978—79-ம் ஆண்டு 168.84 இலட்சம் ரூபாயும் 1979—80-ம் ஆண்டு 191.90 இலட்சம் ரூபாயும் 1980—81-ம் ஆண்டு 267.52 இலட்சம் ரூபாயும் பழங்குடியினர் துணைத் திட்டத்தின் கீழ்செலவிடப்பட்டுள்ளன. தோட்டக்கலை, மண்பாதுகாப்பு, கால்நடை பராமரிப்பு, வனம், கூட்டுறவு, சிறு பாசனம்,கல்வி,மருத்துவம், கதர் மற்றும் கிராமக்கைத் தொழில், பட்டுப்பூச்சி வளர்த்தல், மின்வயப்படுத்துதல், சாலை அமைத்தல், குடிநீர் வசதி அமைத்துக் கொடுத்தல் முதலிய திட்டங்கள் இதில் சேரும்.

(35) தன்னிறைவுத் திட்டத்தை செயல்படுத்திட 80—81-ல் முதன் முதலாக 69 வட்டாரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. இத்திட்டம் 16—7—80 முதல் மேலும் 100 வட்டாரங்களுக்கு நீட்டிக்கப்பட்டது. இத்திட்டத்தின் கீழ் ஆதி திராவிட குடியிருப்புகளுக்கு குடிநீர் வசதிஅளித்தல்,குடியிருப்பு மற்றும்இடுகாட்டிற்கு பாதை அமைத்தல்,பள்ளிக்கட்டிடம் கட்டுதல்ஆகியவேலைகள்செயல்படுத்தப்பட்டு வருகிறது. இத்திட்டத்தின் கீழ் 80—81-ம் ஆண்டு ரூ. 66.23 இலட்சம்செலவிடப்பட்டது. நடப்பு ஆண்டில் இதற்காக ரூ. 75 இலட்சம் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

(36) இந்திய அரசு கொடுத்துள்ள வழிகாட்டி குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு, ஆதி திராவிடர் மக்களுக்காக இவ்வரசு சிறப்புக் கூட்டமைப்புத் திட்டம் (Special Component Plan) தயாரித்துள்ளது.இதன்படி பல்வேறு வளர்ச்சித் தலைப்புகளின் கீழ் பொதுத் துறையில் ஒதுக்கப்பட்ட மொத்த நிதி ஒதுக்கீட்டில் சுமார் 17.8 விழுக்காடு ஆதிதிராவிடர் மற்றும்பழங்குடி மக்களுக்குக் கிட்டவேண்டும். 1981—82-ல் ஆதி திராவிடர்கள் நலனுக்காக செலவிட ரூ. 83.04 கோடிகள் ஒதுக்கப்பட்டுள்ளது. ஆண்டு ஒன்றுக்கு 1.8 இலட்சங்கள் வீதம் 9 இலட்சம் ஆதிதிராவிடர்கள் வறுமைக் கோட்டினைத் தாண்ட 1980—85 ஆகிய 5 வருடங்களில் ரூ.535கோடிகளைசெலவிட வேண்டும் என்பது சிறப்புக் கூட்டமைப்புத்திட்டத்தின் நோக்கம். 1980—81-ம் மத்திய அரசு தமிழ்நாடு அரசுக்கு இத்திட்டத்தின் கீழ் ரூ. 9.56 கோடிகள் அளித்துள்ளது.1981—82-ல் ஆதிதிராவிடர்கள் பொருளாதார முன்னேற்றத் திட்டத்திற்காக ரூ. 4.64 கோடிகள் மத்திய அரசின் சிறப்பு உதவித் தொகையாக அளித்துள்ளது.

பெ. இல. பொன்னுசாமி
ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினர் நல இயக்குனர்

---

சென்னையில்

# ஸ்பெயின் மன்னர்: கவர்னர் - முதல்வர் வரவேற்றனர்

சென்னை, ஜன. 29— சென்னை வந்த ஸ்பெயின் நாட்டு மன்னர் கார்லோஸ் அவரது மனைவி: ராணி சோபியா ஆகியோருக்கு விமான நிலையத்தில் சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. தமிழக ஆளுநர் சாதிக் அலி, முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோர் மன்னருக்கு மாலை அணிவித்து வரவேற்றனர்.

ஸ்பெயின் நாட்டு மன்னர் ஜவன் கார்லோஸ் அவரது மனைவிமார் ராணி சோபியா ஆகியோர் இந்தியா வந்துள்ளனர். தமிழகத்திலும் அவர்கள் 4 நாள் சுற்றுப்பயணம் செய்கிறார்கள்.

நேற்று இரவு பூனாவிலிருந்து விமானம் மூலம் அவர்கள் சென்னை வந்தனர். மன்னர் ஜவன் கார்லோஸ், ராணி சோபியா ஆகியோர்களை விமான நிலையத்தில் ஆளுநர் சாதிக் அலி முதலவர் புரட்சித்தலைவர்ஆகியோர் சந்தனமாலை அணிவித்தனர். ஆளுநரின் மனைவியார் திருமதி சாந்தி சாதிக் அலி சோபியாவுக்கு மலர்கொத்து அளித்தார். இந்த வரவேற்பில் சபாநாயகர் ராசாராம் நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் ஊரகத் தொழில் துறை அமைச்சர் கே. ஏ. கே., மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சர் டாக்டர் அண்டே, சமூகநலத்துறை அமைச்சர் கோமதிசீனிவாசன்: தமிழக குடிசை மாற்று வாரியத்தலைவர் டி. கே. கபாலிஎம்.எல்.ஏ., ஆகியோர் கலந்து கொண்டனர்.

துணை சபாநாயகர் பி. எச். பாண்டியன் சென்னை செரீப் சிவந்தி ஆதித்தன், தலைமை செயலாளர் கே. திரவியம் தமிழ்நாடு திட்டக் குழுத் தலைவர் வி. கார்த்திகேயன் போலீஸ் ஐ.ஜி.கே. ராதாகிருஷ்ணன் தமிழ்நாடு மைசூர் கேரளம ஏரியா தரைப்படை தளபதி மேஜர் ஜெனரல் பன்னு, சென்னையில்உள்ள ஸ்பெயின் நாட்டு துணைத் தூதுவர் ஜார்ஜ் பி. எம். பலாமோ டாகடர் பத்ரிநாத் மற்றும் விமானப் படை, கப்பற்படை தலைமை அதிகாரிகள் ஆகியோர்களும் வரவேற்பில் கலந்து கொண்டனர்.

## உற்சாக வரவேற்பு

ஆளுநர் சாதிக் அலியும் முதல்வர் புரட்சித்தலைவரும் மன்னருக்கு மாலை அணிவித்து அழைத்து வந்தனர்.

அமைச்சர்கள்அதிகாரிகள் மற்றும் முக்கிய பிரமுகர்களை ஆளுநரும், முதல்வரும் மன்னருக்கு அறிமுகம் செய்து வைத்தனர். மன்னர் அவர்களுடன் கை குலுக்கினார் பின்னர் மோட்டார் சைக்கிள் வீரர்கள் அணிவகுத்து முன் செல்ல மன்னர் தம்பதிகள் கிண்டி ஆளுநர் மாளிகைக்குக் காரில் அழைத்துச் செல்லப்பட்டனர்.

ஆளுநர் சாதிக்அலி மன்னருடன் ஒரு காரில செல்ல ராணி சோபியாவுடன் ஆளுநர் மனைவி சாந்தி சாதிக் அலிமற்றொரு காரில் சென்றார்.

மன்னர் இன்று மாலை சென்னை நுங்கம்பாக்கத்தில் உள்ள மருத்துவ ஆராய்ச்சி நிலையத்தில நடைபெறும் ஒரு நிகழச்சியில் கலநதுகொள்கிறார். நாளை 31ம் தேதி மன்னர் தம்பதிகள் மகாபலிபுரம் செலகிறார்கள்.

## நடிகர் ஷெட்டி மரணம்

பம்பாய், ஜன. 29— பம்பாயைச் சேர்ந்தபிரபல சண்டைக் காட்சி நடிகர் ஷெட்டி மாரடைப்பால் மரணம அடைந்தார்.

இறுதியாக அவர் "போக்கிரிராஜா" என்ற தமிழ்ப் படத்தில் ரஜினி காநத்துடன் நடித்திருந்தார்.

---

★ இந்தி ஆதிக்கத்தின் பிடியிலிருந்து இந்தியாவைக் காத்த பெருமை தமிழகத்துக்கே சொந்தம்

## எந்த வகையிலும் - எந்த ரூபத்திலும் நடக்கும்

# இந்தித் திணிப்பை எதிர்த்தே தீருவோம்

## வீர வணக்க நாள் கூட்டத்தில் அமைச்சர் எஸ்.டி.எஸ். சங்கநாதம்

**சேலம், ஜன. 21- இந்தி ஆதிக்கத்தின் பிடியில் சிக்காமல் இந்தியாவைக் காத்தது தமிழகம்தான். எந்த ரூபத்தில் இந்தித் திணிப்பு நடந்தாலும் அதை எதிர்த்தே தீருவோம் என்று அமைச்சர் எஸ். டி. எஸ். கூறினார்.**

சேலத்தில் நடைபெற்ற வீர வணக்கநாள் விழாவில் வருவாய்த்துறை அமைச்சர் எஸ். டி. எஸ். சிறப்புரை ஆற்றினார். இவ்விழாவிற்கு சேலம் மாவட்ட செயலர் கண்ணன் தலைமை தாங்கினார்.

இவ்விழாவில் சேலம் மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற துணைச் செயலாளர் ராஜா, மன்றச் செயலாளர் துரை சேலம்மாவட்ட மாணவர்கள் சங்கத் தலைவர் நடேசன் புரட்சித் தலைவர் எம். ஜி. ஆர். மன்றத்தைச் சேர்ந்த எஸ். பி. அங்கமுத்து, சங்ககிரி தொகுதி சட்டமன்ற உறுப்பினர் தனபால், மாநிலப் பொதுக்குழு உறுப்பினர் மணிமாறன், சேலம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் ஆறுமுகம், ராசிபுரம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் ராமலிங்கம், சேலம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் கிருஷ்ணராஜ், முன்னாள் துணை அமைப்பாளர் எம். எம். ரகுமான் பவானி சாகர், சட்டமன்ற தொகுதி உறுப்பினர் சுப்பிரமணியம், பா.வளர்மதி ஆகியோர் உரையாற்றினார்கள்.

அமைச்சர் எஸ். டி.எஸ். பேசுகையில் கூறியதாவது;

வீர வணக்க நாள் விழாவை ஏன் கொண்டாடுகிறோம் என்பது உங்களுக்கு மிக நன்றாகத் தெரியும். 15 ஆண்டுகளுக்கு முன்னால் நடைபெற்ற நிகழ்ச்சியே வீர வணக்க நாள். 1965-ம் ஆண்டு இதே நாளில் பல இடங்களில்குறிப்பாகநான் படித்த பல்கலைக்கழகத்தில் மாணவ நண்பர் ராஜேந்திரன் சுட்டுக் கொல்லப்பட்டார் என்ற செய்தி கேட்டு, சென்று பார்க்கிற பொழுது ஆயிரம் விஷப் பாம்புகள் என் இதயத்தைகடித்துகடித்து அவைகளை மென்றுமென்று துப்பினால் அது எவ்வளவு வேதனையாக இருக்குமோ அந்தவேதனையை நான் பெற்றேன். நான்மட்டுமல்ல பேரறிஞர் அண்ணா அவர்களும், அவர்கள் மட்டுமல்ல திராவிட இயக்கத்தில் உள்ள மற்றவர்களும் வேதனை அடைந்தார்கள். 1965ம் ஆண்டில் இந்தி எதிர்ப்புப் போர். 1937ல் இந்தி எதிர்ப்புப் போர். பெரியாரும், அண்ணாவும் சிறைக் கோட்டதத்தில் அடைக்கப் பட்டார்கள்,

### இன்னுயிர் நீத்தவர்கள்

தஞ்சை மாவட்டத்தை சேர்ந்த தாளமுத்து, நடராஜன் ஆகிய இருவரும் தமிழைக் காக்க சிறைக் கோட்டம் சென்று தம் இன்னுயிரை நீத்தார்கள்.

21-2-1940 ல் கட்டாய இந்தி ரத்து செய்யப்பட்டது. மீண்டும் 1946ல் கட்டாய இந்தி திணிக்கப்பட்டது.

பேரறிஞர் அண்ணா அவர்கள் இந்தி எதிர்ப்பு போராட்டத்தின் முதல் தளபதி ஆனார்.

கட்டாய இந்தி புகுத்துவது தொடர் கதையாக ஆகிக்கொண்டு வருகிறது. தொடர்கதையாக ஆகிக் கொண்டு வருவதை தொடரும் கதையாக தமிழ்நாட்டு மக்கள் விட மாட்டார்கள்.

### இந்தியின் இருமுனைத் தாக்குதல்

1965-ல் இந்திக்கு எதிர்ப்பாக எழுப்பப்பட்ட போராட்டம் இந்தி ஆட்சி மொழி ஆக்கப்படுவதை எதிர்த்து நாம் வெற்றி பெற்றோம். அவர்கள் தோல்வியைத் தழுவிக் கொண்டார்கள்.புதியதந்திரத்தை ஆட்சியர்கள் மேற்கொண்டார்கள். இந்தி இந்த நாட்டினுடைய தனி ஆட்சிமொழி என்றார்கள். 1965-ம் ஆண்டு ஜனவரிக்குப் பிறகு இந்தி தான் இந்த நாட்டின் ஆட்சி மொழி என்றார்கள். இந்தி எதிர்ப்புப் போர் மூண்டது. 1965ல் என்ன நடந்ததுஎன்பது உங்களுக்குத் தெரியும்.

இந்தி இந்த நாட்டினுடைய ஆட்சி மொழியாக வரவேண்டும் என்று சொல்லுகிறவர்கள் இரண்டுகாரணங்களைத் தெரிவித்தார்கள். ஒன்று இந்த நாட்டில் பெரும்பாலோர் இந்தி பேசுகிறார்கள். பெரும்பாலோர் எங்கே இந்தி பேசுகிறார்கள்? உத்திரப் பிரதேசத்தில் இந்தி பேசுகிறார்கள்.பிகாரில் இந்தி பேசுகிறார்கள். மத்தியப் பிரதேசத்தில் இந்தி பேசுகிறார்கள். ராஜஸ்தானில் இந்தி பேசுகிறார்கள். ஹரியானாவில் இந்தி பேசுகிறார்கள். ஆனால் நான் அவர்களைக் கேட்டுக் கொள்வேன். மேற்கு வங்கத்தில் இந்தி பேசுகிறார்களா? பஞ்சாபில் இந்தி பேசுகிறார்களா? ஒரிஸ்ஸாவில் இந்தி பேசுகிறார்களா? அஸ்ஸாமில் இந்தி பேசுகிறார்களா? காஷ்மீரில் இந்திபேசுகிறார்களா? மகாராஷ்டிரத்தில் இந்தி பேசுகிறார்களா? குஜராத்தில இந்தி பேசுகிறார்களா? கர்நாடகத்தில் இந்தி பேசுகிறார்களா? ஆந்திராவில் இந்தி பேசுகிறார்களா? கேரளாவில் இந்திபேசுகிறார்களா? அல்லது தமிழ்நாட்டில் இந்தி பேசுகிறார்களா?

பெரும்பாலோர் எங்கே இந்தி பேசுகிறார்கள்?

### எப்படி ஏற்க முடியும்?

ஆனால் இந்தி மொழி காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரிவரை பரவலாகப் பேசப்படுகிறது என்று சொன்னால்வாதத்திற்காக ஏற்றுக்கொள்ளலாம். ஆனால் குறிப்பிட்ட ஒரே இடத்தில் ஐந்து மாநிலங்களில் மட்டும் தான் இந்தி பேசுகிறார்கள், நாடு முழுவதும் இந்தி பேசத்தேவையில்லை, ஆனால் பரவலாக மட்டும் பேசினால் ஏற்றுக்கொள்ளலாம்.

தமிழ் நாட்டில் குறைந்தது இரண்டு லட்சம் பேர்களாவது இந்தியைத் தாய்மொழியாக கொண்டவர்கள் உள்ளார்களா? கேரளாவில் குறைந்தது 2 லட்சம் பேர்களாவது இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் இருக்கிறார்களா? ஆந்திராவில் குறைந்த பட்சம் ஐந்து லட்சம் பேர் இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் உள்ளார்களா? இம்மாதிரியாக பெரும்பாலான மாநிலங்களில் சிறுபான்மையினராவது இந்தி பேசுகிறவர்கள் இருக்கிறார்களா? இல்லையே. காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரையிலும் பரவலாக இந்திப் பேசப்படுகிறது என்று சொல்ல முடியுமா? முடியாதே? எப்படி இந்தியை ஆட்சி மொழியாக எடுத்துக்கொள்ளமுடியும்?

### பதில் சொல்வார்களா?

இந்தி ஆட்சிமொழியாக ஆவதற்கு சொல்கின்ற மற்றொரு காரணம் இந்திய ஒருமைப்பாட்டை வலுப்படுத்துவதற்கு என்கிறார்கள். இந்திய ஒருமைப்பாட்டை வலுப்படுத்துவதற்கு இந்தி எப்படி பயன்படும்?

வடமாநிலத்தவர்கள் தான் பதில் சொல்லவேண்டும். இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள் தான் பதில் சொல்ல வேண்டும்.

காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் தான் பதில் சொல்ல வேண்டும். இந்திய பேரரசுதான்பதில் சொல்லவேண்டும். இவர்களால் பதில் சொல்ல முடியாது.

இந்திய துணைக்கண்டம் பல தேசங்களால் ஆனது. அரசியல்சட்டத்தில் இந்த நாட்டில் பல தேசிய மொழிகள் உண்டு என்பதைத் தெரிவித்துள்ளது. இந்தியத் துணைக்கண்டத்தில் 16க்கு மேற்பட்ட தேசிய மொழிகள் உண்டு. எப்படி 16 தேசிய மொழிகள் வந்தது? தேசங்கள் இருந்தால்தான் தேசிய மொழிகள் வரமுடியும். நாடு இருந்தால் தானே நாட்டுமொழி வரமுடியும்? Nation இருந்தால் தானே National language வர முடியும்? ஆகையால்தான் இந்தியா பல தேசங்களை கொண்ட துணைக்கண்டம் பல தேசிய இனமக்களைக் கொண்ட துணைக்கண்டம். பல தேசிய மொழி பேசுகிற இனமக்களை கொண்ட துணைக்கண்டம்.என்பதை நான் சொல்லவில்லை. இந்திய அரசியல் சட்டம் சொல்லுகிறது, இதற்குப் பிறகுஎப்படி ஒரு மொழி ஆட்சி மொழியாக வரமுடியும்.

### தமிழகம் தந்த பெருமை

1965 ஜனவரி மாதம் 26க்கு பிறகு இந்தியா பூராவும் இந்தி ஆட்சி மொழி. இதை அரசியல் சட்டம் தெரிவித்தது. என்ன ஆயிற்று? தமிழ் நாட்டு மாணவர்கள் இதை மாற்றி அமைத்தார்கள். பெரியாருடைய போராட்ட முறையாலும் அண்ணா அவர்களுடைய எழுத்தாலும், பேச்சாலும் மாணவர்கள் இந்தப் போராட்டத்தில் வெற்றி பெற்றார்கள். தமிழ்நாட்டு மாணவர்கள் பெற்ற வெற்றி தமிழ்நாட்டுக்கு மட்டுமல்ல. இந்திய துணைக் கண்டத்திலுள்ள இந்தி பேசாத எல்லா மாநிலங்களுக்கும் வெற்றியைத் தேடித் தந்தார்கள்,

தமிழ்நாட்டு மாணவர்கள் வெற்றியைத் தேடித் தராமலிருந்தால் இன்றையதினம் இந்திஇந்தியாவில் தனி ஆட்சிமொழியாக வந்து இருக்கும். மேற்கு வங்கத்தில் இந்தி ஆட்சிமொழி வந்திருக்கும். மகாராஷ்டிரா, ஒரிசா, அசாம், கர்நாடகா, தமிழ்நாடு போன்ற எல்லா மாநிலங்களிலும் இந்தி ஆட்சி மொழியாக வந்திருக்கும். இப்படி எல்லா மாநிலத்திலும் இந்தி ஆட்சிமொழியாகவந்திருக்கும். இந்தி ஆட்சி மொழியாக வராமல் தடுத்த பெருமை தமிழ்நாட்டு மாணவர்களையும் தமிழ்நாட்டு மக்களையும் சாரும்.

### நேரு வாக்குறுதி

இந்தி பேசாதமாநிலங்களுக்கு மறைந்த முன்னாள் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு நாடாளுமன்றத்தில் ஒரு வாக்குறுதி கொடுத்தார். வாக்குறுதி யார் வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் கொடுப்பதில்லை. தேவைப்படும் போது தகுந்த வாய்ந்த முக்கியமான பிரச்சினைக்குதான் வாக்குறுதிகொடுக்கபடும். இந்தநாட்டில்இந்தி ஆட்சிமொழியாக வருவதற்கு இந்தி பேசாதமக்கள் நிர்ணயிக்கிற காலக்கெடு வரையிலும் இந்தி இந்த நாட்டின் ஆட்சி மொழியாக வராது. வாக்குறுதி இன்றைக்கு என்ன ஆயிறறு? இந்தியப்பேரரசு ஒரு ஆட்சி மொழிக்குழுவை அமைத்துள்ளது. அந்தக் குழுவில உள்ளவர்கள எப்படியும இந்தியை இந்த நாட்டினுடைய ஆட்சி மொழியாகக் கொண்டு வருவதற்கு என்ன செய்வது என்று ஆராய்கிறார்கள்.

இந்தி பேசாத மாநில மக்கள் எல்லோரையும் கேட்டுக் கொள்கிறேன். நான் கேட்டுக் கொள்வதற்குக் காரணம் நீங்கள இந்தி ஆட்சிமொழி ஆவதை ஏற்றுக் கொண்டால் உங்கள் தாய் மொழி என்ன ஆயிறறு? உங்கள தாய்மொழி மீது உங்களுக்கு நம்பிக்கை இல்லையா? உங்களுக்குத தாய்மொழிப் பற்று இல்லையா? உங்கள் தாய மொழி மூலமாக உங்கள நாட்டு மக்கள தங்கள் அறிவை வளர்த்துக் கொள்ள முடியும என்ற நம்பிக்கை உங்களுக்கு இல்லையா? இந்தி மொழிக்கு நீங்கள் அடிமை ஆகப் போகிறீர்களா? நீங்கள இந்தநாட்டின் இரண்டாம் தர குடிமக்களாக ஆக சம்மதிக்கப் போகிறீர்களா? இதை நான் கேட்பதற்குக் காரணம் ஆட்சி மொழிக் குழு உங்கள் மாநிலத்தில வரும் பொழுது நான் கேட்ட கேள்விகளுக்கு நீங்கள் பதில் சொல்ல வேண்டும்.

### திணிப்பை தடுப்போம்

தமிழ்நாட்டில் உள்ள மாணவர்களையும், பொது மக்களையும்கேட்டுக் கொள்வேன். 1965ம் ஆண்டு நடைபெற்ற மொழிப் போராட்டத்தில், மாணவர்கள் நடத்தியபோராட்டத்தில், தமிழ் நாட்டு மக்கள் எப்படி உறுதுணையாக இருந்தார்களோ, அதேபோல் எப்போதும் இந்தி இந்த நாட்டு மக்களின் மீது திணிக்கப்படும் போது தடுக்கப்படும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

அண்ணா அவர்கள் சட்டமன்ற உறுப்பினராக ஆவதற்கு முன்னாலே பேசியது அல்ல, சட்டமன்ற உறுப்பினராக பேசியது அல்ல. நாடாளுமன்ற உறுப்பினராக பேசியது அல்ல.இந்த நாட்டினுடையமுதலமைச்சரான பிறகு பேசிய பேச்சு. அதுவும் இந்திய குடியரசுத்தலைவர் ஜாகீர் உசேனை அருகில் வைத்துக்கொண்டு பேசிய பேச்சு.இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில்தலைமை உரையில் பேரறிஞர் அண்ணா பேசிய அந்தப் பேச்சு இதோ;

(அண்ணா பேசிய பேச்சின் நாடாவை எஸ். டி. எஸ். ஒலிபரப்புகிறார். அண்ணாவின் குரல் கீழ்க்கண்டவாறு ஒலிக்கிறது.)

### அண்ணா சொன்னது

"எந்த மொழியையும் நாங்கள் மதிக்கத் தயங்கவில்லை. உலகத்தில் அறிவு எந்தக் கோடியில் இருந்தாலும் அதை எடுத்துக் கொள்ள மறுக்கவில்லை. ஆனால் தமிழர்கள் தமக்கு என்று உள்ளதை ஒருக்காலும் இழக்க சம்மதிக்க மாட்டார்கள்.

ஏனென்றால் அவர்களிடத்திலே உள்ளது அருமையானது என்பதனை அவர்கள் உணர்ந்துள்ளார்கள். இவ்வளவு அருமையான தமிழ்மொழி மீது தமிழ் மக்கள் பற்று அற்றவர்களாக இருப்பார்கள் என்று கருதிவிட முடியுமா? அந்த மொழிக்கு எந்தக் கட்டத்திலாவது எந்த நேரத்திலாவது எப்படிப்பட்டவராயினும் அதற்குத் தகுந்த இடமும் தனி மரியாதையும், உரிய உரிமையும் தரப்படாவிட்டால் தமிழகம் பொறுத்துக் கொள்ளாது என்பதையும் எடுத்துக்காட்ட கடமைப்பட்டிருக்கிறேன்.

"ஆழ்கடல் கொந்தளித்துக் கொண்டுள்ளது. நல்ல நாவாய் மூலமாக கடக்க முடியும். தமிழர்களை அணைத்து அழைத்துச் சென்றால் அகில உலகத்தில் உள்ளவர்களுக்கும் அவர்கள் தோழர்களாக இருப்பார்கள்.

"மற்றவரால் நமக்குத் தீங்கும் வராது, மற்றவராலே நமக்கு நல்லதும் வராது. நல்லது வரவேண்டுமானாலும் நம்மாலேதான் வர வேண்டும். கெட்டது வர வேண்டுமானாலும் நம்மாலேதான் வரவேண்டும்.

### ஆட்சிமொழி தமிழ்

"இது அல்லவா இணைப்பு மொழி. இது அல்லவா பொதுமொழி. இது அல்லவா ஆட்சிமொழியாக இருக்கவேண்டும் என்று சொல்லத்தக்க ஒரு காலம் வர வேண்டும். அந்தக் காலம் வருமென்பதில் நான் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ளேன்"

"தமிழ் மொழியை அரியாசனத்தில் அமைக்கின்ற காலம் வந்தே தீரும்"

(அண்ணாவின் பேச்சு முடிகிறது.தொடர்ந்து எஸ். டி. எஸ். பேசுகிறார்)

நான் பேசுகிற பொழுது இந்திக்கு எதிர்ப்புஉணர்வுகளைத் தெரிவித்தேன்.

அண்ணா அவர்கள்நோய் வாய்ப்பட்டு அமெரிக்காவுக்கு சென்று மிகப்பெரிய அறுவை சிகிச்சை பெற்று தாயகம் திரும்புகிறார்கள். உடல்நிலை முற்றிலும் தேறவில்லை. அந்த நிலையிலும் அண்ணா அவர்கள் சென்னை ராஜதானிக்குத் தமிழ்நாடு என்று பெயர் மாற்றும் விழாவில் பேசுகிற பொழுது எப்படிப்பட்ட உணர்வுகளைப் பெற்றிருந்தார்கள் என்பதை நாட்டு மக்களுக்கு எடுத்துக்காட்ட கடமைப்பட்டுள்ளேன். அண்ணாவின் பேச்சின் ஒருபகுதி இது:

(நாடாவிலிருந்துமீண்டும் அண்ணாவின் குரல் ஒலிக்கிறது)

"சில சட்டங்கள் ஐந்து ஆண்டுகள் இருக்கும். பிறகு மாற்றப்படக் கூடும். சில சட்டங்கள் 10 ஆண்டுகள் இருக்கக்கூடும். பிறகு மாற்றப்படும். நம்மால் கொண்டு வரப்பட்ட வரலாறுமிக்க தமிழ்நாடு பெயர் மாற்றம் என்றும் நிலைபெற்று இருக்கும். யார் ஆட்சிக்கு வந்தாலும் இதில் மாற்றங்கள் செய்கின்ற துணிவோ, எண்ணமோ எழமுடியாது. இது யாராலும் மாற்றப்பட முடியாத மாற்றமாகும்.

### இந்திக்கு இடமில்லை

"இந்தி இஷ்டப்பாடமாக வேண்டுமானாலும் இருக்கட்டும். கட்டாயப் பாடமாக வேண்டாம் என்பது நான் முதன் முதலாக இந்தி எதிர்ப்பு போரில் எழுப்பிய முழக்கமாகும். இல்லை இல்லை என்று அன்றைய தினம் வாதாடினார்கள். நாம் இந்த அரசு பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகு இனி தமிழகத்தில் இந்திக்கு இடமில்லை என்று சட்டம் இயற்றி இருக்கிறோம்.

"இந்த நன்நாள் நமக்குத் தமிழ்நாடு என்று பெயர் கிடைத்தது மட்டுமல்ல.இது மற்ற பல சிறப்புகளுக்கு நம்மை அழைத்துச்சென்று இறுதிச்சிறப்பான இந்திய குடியரசு எல்லைக்கு உட்பட்டு, இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்பட்டு, தமிழ் நாட்டுக்கு உரிய அதிகாரம், தமிழ் நாட்டுக்கு உரிய மாண்புகளை தமிழ்நாட்டுக்குஉரிய எல்லாவிதமான ஏற்றங்களும் கிடைக்கும்படியான ஒரு அரசியல் மாறுதல் நமக்கு கிடைக்க வேண்டும்.

"தமிழர்கள் அடைய வேண்டிய பெருமையை நம்முடைய காலத்தில் பெற்றுத்தந்தோம். பிறகு தான் கண்மூடினேன் என்று சொல்லிக் கொள்ளக் கூடிய பெருமையை நாம் ஒவ்வொருவரும் பெற வேண்டும்".

(அண்ணாவின் பேச்சு முடிகிறது. எஸ். டி. எஸ். தொடர்கிறார்.)

### நம் கடமை

பேரறிஞர் அண்ணா உடல்நிலை மிகுதியாக பாதிக்கப்பட்ட நேரத்தில் கூட மாநிலங்களுக்குரிய அதிகாரங்களை பெறவேண்டும என்று சொல்லத் தவறவில்லை. அது மட்டுமல்ல. தமிழர்கள் அடைய வேண்டிய பெருமையை நம்முடைய காலத்திலே பெற்றுத்தந்தோம். அதன் பிறகு கண்மூடினேன் என்ற பெருமைஒவ்வொருவருக்கும் வரவேண்டுமென்று ஆணை பிறப்பித்துள்ளார்கள். அண்ணா கண்மூடு முன் எண்ணற்ற பெருமைகளை தமிழர்களுக்கு பெற்று தந்து நம்மைவிட்டு பிரிந்தார்கள். பெற்றுத் தந்த பெருமைகளைகாப்பாற்றிக் கொள்ள வேண்டியது நம்முடைய கடமையாகும்.

(மீண்டும் நாடாவிலிருந்து அண்ணாவின் குரல் ஒலிக்கிறது)

### அண்ணாவின் பேச்சு

"தமிழ்நாடு என்று பெயர் வைப்பது மூலம் சோறுகிடைக்குமா என்று கேட்கிற நண்பர்கள் சோற்றுக்கு சோறு என்று ஏன் பெயர் வைக்கிறார்கள் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். அவித்து எடுப்பதை அவியல் என்கிறார்கள். துவைத்து எடுப்பதைத் துவையல் என்கிறார்கள்; வறுத்து எடுப்பதை வறுவல் என்கிறார்கள்; பொரித்து எடுப்பவை பொரியல் என்கிறார்கள். இவை எல்லாம் சொல்லுவதனாலேயே அவைகளை எல்லாம் அண்ணன் சாப்பிடுகிறான் என்று கருதாதே. இவைகளையெல்லாம் சாப்பிடுவதற்கு முயற்சிஎடுத்துக்கொண்டு வருகிறேன். இன்னும் முற்றுப்பெறாத நிலையிலே உள்ளேன்."

(அண்ணா பேச்சு முடிகிறது. எஸ். டி. எஸ். தொடர்கிறார்)

அண்ணாஅவர்கள் நம்மை விட்டுப் பிரிவதற்கு முன்னாலே பேசிய பேச்சில் உணவுகளை சாப்பிட முயற்சி செய்கிறேன். முற்றுப் பெறவில்லைஎன்று தெரிவித்தார்கள்.முற்றுப் பெறுவதற்கு முன்னமே நம்மைவிட்டு பிரிந்து விட்டார். இதைநான் எண்ணுகிறபொழுது நான் ஆரம்பத்தில் தெரிவித்தபடி, ஆயிரம் விஷப் பாம்புகள் ஒன்றாகக் கூடி, என் இதயத்தைக்கடித்து, கடித்து, மென்றுமென்று துப்புகிற பொழுதுஎவ்வளவுவேதனைகள் என்னைத் துன்புறுத்துமோ அந்த அளவுக்கு வேதனைகள் என் உள்ளத்தை வாட்டுகிறது.

முன்னாள் இந்திய பேரரசின் தலைமை அமைச்சர் பண்டிட் ஜவஹர்லால் நேருஅவர்கள் இந்திமொழியைப்பற்றி நாடாளுமன்றத்தில் கொடுத்த வாக்குறுதி நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்.

### தாய்மொழிக்கு உரிய இடம்

இந்த வாக்குறுதி இன்று தீர்மானவடிவிலேஉள்ளது. இந்தி பேசாத மக்களுக்கு இது போதுமாஎன்றால்நிச்சயமாக போதாது. நேருவின் வாக்குறுதிக்கு அரசியல் சட்ட பாதுகாப்பு வேண்டும். அரசியல்சட்ட பாதுகாப்பு கொடுக்க இந்திய பேரரசு தயக்கம்காட்டினால்மொழிப்பிரச்னையில் இந்தி பேசாத மக்கள் மத்திய பேரரசை நம்புவதற்கில்லை.

இந்தி பேசாத மாநில மக்கள், கட்சி கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டு நாட்டின் நலன் கருதி மக்கள் நலன் கருதி ஆட்சி மொழிவிஷயத்தில் நியாய உணர்வுகளைப் பெறவேண்டும். இந்தி பேசாத மாநிலங்களில் உள்ள அரசியல் தலைவர்கள், அரசியல் பொறுப்பிலே உள்ளவர்கள் நாட்டுமக்களுக்காகவும் தாய்மொழியை உரிய இடத்தில்வைப்பதற்காகவும தியாக உணர்வுகளைபெறவேண்டும் என்று இந்த வீர வணக்கநாளில் என்னுடைய உள்ள உணர்வுகளைத் தெரிவிக்க கடமைபட்டுள்ளேன்.

இவ்வாறு அமைச்சர் எஸ்.டி.எஸ். கூறினார்.

### திருமணம்

திருவையாறு அருகேயுள்ள விளாங்குடி கழக துணைச் செயலாளர் ஏ. கணேசனுக்கும் விஜயாவுக்கும் பிப்ரவரி 3 ந்தேதி காலை 10 மணிக்கு விளாங்குடியில் திருமணம் நடைபெறுகிறது.

★ ★ ★

கோவை மாவட்டம் மேட்டுப்பாளையம் கழக மாணவர் பிரிவு அமைப்பாளர் எம். ஐ. அமானுல்லாவின் சகோதரர் ஜபருல்லா - ஹவ்வாபீபி ஆகியோர் திருமணம் வரும் 31-ந்தேதி ஞாயிறு காலை 11 மணிக்கு மேட்டுப்பாளையத்தில் நடைபெறுகிறது.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029

Editor: B. PARASURAMAN,